# திலீபனுடன் 12 நாட்கள்

– மு.வே.யோ. வாஞ்சிநாதன்





தியாகதீபம்

லெப்.கேணல். திலீபனின்

(இராசையா பார்த்திபன்)

உண்ணாவிரதப் போராட்டம்

15.09.1987 - 26.09.1987




தமிழீழ விடுதலைப் புலிகளின் யாழ்.மாவட்ட அரசியற் பிரிவுப் பொறுப்பாளர் திலீபன் அவர்கள்,15.09.1987 அன்று,நல்லூர்க் கந்தசாமி கோயிலின் முன்பாக, ஐந்து கோரிக்கைகளை முன்வைத்துச் சாகும் வரையிலான உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பித்தார். இந்திய வல்லாதிக்கத்தின் கண்களைத் திறப்பதற்காக அவர் மேற்கொண்ட அந்தத் தியாக பயணத்தில், 12 நாட்கள் ஒரு சொட்டு நீர் கூட அருந்தாமல், மனக்கட்டுப்பாட்டுடன் இருந்து, தமிழ் பேசும் மக்களின் விடுதலைத் தீயைக் கொழுந்து விட்டு எரியச் செய்தபின், 26.09.1987 அன்று ஈகச்சாவு அடைந்தார். அந்த ஈகப் பயணத்தில் 12 நாட்களும் அவரின் அருகிலிருந்து, வேதனைக்கடலில் மூழ்கி, ஈகை வேள்வியில் சங்கமமாகி, நேரில் கண்ட உண்மை அனுபவங்களை கட்டுரைத் தொடராக உங்கள் முன் சமர்ப்பிக்கிறேன்.

இந்த நூல் எழுதப்பட்ட சூழ்நிலை மிகவும் சிக்கலானது. இந்திய வல்லாதிக்கத்துடன் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தினர் மிகவும் உக்கிரமாக

மோதிக்கொண்டிருந்த காலகட்டம் அது… இந்தியாவின் தமிழ்நாடு மாநிலத்தில், அ.இ.அ.தி.மு.க ஆட்சி நீக்கப்பட்டு, ஆளுநர் ஒருவரின் பொறுப்பில் விடப்பட்டிருந்த காலம் அது… தமிழீழ விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்ட இயக்கங்கள் பலவற்றைத் தப்பான வழியில் செலுத்தி, இயக்கங்களுக்கிடையே மோதலை ஏற்படுத்துவதற்காக "றோ" வின் நரி மூளை மிகத் தீவிரமாக வேலை செய்துகொண்டிருந்த காலம் அது . இந்நூலை நான் எழுதுவதற்காகக் கிட்டு அண்ணாவின் அழைப்பை ஏற்று இந்தியா சென்றபோது, வேதாரண்யம் காவல் அதிகாரிகளினால் 1988 மாசி மாதம் கைது செய்யப்பட்டேன்.

அக்காவல் நிலையத்திலிருந்த எல்லோருமே தமிழர்கள் என்பதனால் என்னை அவர்களிடம் அடையாளம் காட்டியபோது, நான் மிருகத்தனமாக அவர்களால் தாக்கப்பட்டேன். தமிழ்நாட்டிற்கு எதற்காக வந்தாய்? ஆயுதம் கொண்டு போகவா? கண்ணிவெடிவைக்க வெடிமருந்து கொண்டு போகவா? என்று அடிக்கடி கேட்டுக் கேட்டு மிருகம் போல் அவர்களில் ஒருவன் தாக்கிய போது, என் மூக்கிலிருந்து இரத்தம் பீறிட்டுக்கொண்டு வந்தது. உடம்பின் சகல பகுதிகளிலும் ஏற்பட்ட குண்டாந்தடிக் காயங்களால் உடம்பே பற்றி எரிவது போல் இருந்தது. இந்திய வெறியர்களுக்கு வடம் பிடிக்கும் இவனைப் போன்ற ஒரு சில தமிழர்கள் உள்ள வரை, உலகத் தமிழனுக்கு வெகு விரைவில் விடிவு ஏற்பட்டு விடாது என்பதை அப்போது நான் எண்ணிக்கொண்டேன். தமிழீழ விடுதலைப் புலிகளின் தமிழ்நாட்டு முகாம்கள் எங்கெங்கே இருக்கின்றன என்றும், அவைகளில் யார், யார் இருக்கின்றார்கள் என்றும் வேறு ஒரு உப அதிகாரி (எஸ்.ஐ) என்னிடம் மிரட்டிக் கேட்டான்.

நான் அதற்கு எவ்வித பதிலும் கூறாமல் இறுதிவரை நிற்கவே, இவனும் அவனுடன் சேர்ந்து என்னை மிருகம் போல் தாக்கினான் " ஓடையிலே என் சாம்பல் கரையும்போதும் என் தமிழே சல சலத்து ஓடவேண்டும் …" என்ற தமிழ்க் கவிஞனின் வரிகள் தான் எனக்கு அப்போது நினைவுக்கு வந்தன. காக்கை வன்னியன், எட்டப்பன் போன்றவர்களின் நாமம் அழிந்து விடாமல் இருக்க,இன்னும் நமது இனத்தில் பலபேர் இருந்து கொண்டிருக்கிறார்கள்… "அங்கே எமது ஆட்களைக் கண்ணிவெடி வைத்துக் கொல்கிறீர்கள்… இங்கே வெடிமருந்து … ஆயுதங்களை வாங்க வருகிறீர்கள் … உங்களையெல்லாம் நாயைச் சுடுவதுபோல் சுட்டுத்தள்ள வேண்டும்" என்று அவன் கூறினான். " உன் அப்பன் என்ன இந்திக்காரனா?" என்று, துணிந்து கோபத்துடன் கேட்டேன். அடுத்த நிமிடமே என் நெஞ்சிலும்,வயிற்றிலும் அவர்கள் இருவரும் மாறி மாறிக் குத்துவிட்டார்கள்… நான் மயங்கிவிட்டேன்! அடுத்தநாள் காலைவரை எவ்வித உணவோ, தண்ணீரோ அற்றநிலையில், குளிர்ந்த தரையில் படுக்கவிடப்பட்டேன்… காலையில் திருத்துறைப்பூண்டியிலுள்ள நீதிமன்றத்தில் நான் நிறுத்தப்பட்டேன்.

கடவுச்சீட்டு இல்லாமல் நாட்டுக்குள் நுழைந்த குற்றம் என் மீது சுமத்தப்பட்டு,15

நாட்கள் வரை திருச்சி மத்திய சிறைச்சாலையில் வைத்திருக்கும்படி நீதிபதி உத்திரவிட்டார். காவல் நிலையத்தில் எனக்கு நிகழ்ந்த கொடுமைகளைக் கூற முயன்ற போது, நான் மேற்கொண்டு பேச அனுமதிக்கப்படவில்லை... திருச்சி மத்திய சிறையிலிருந்து பிணையில் விடுவிக்கப்பட்டு,சென்னை சென்ற நான் கிட்டு அண்ணாவின் உத்திரவின்படி திலீபன் பற்றிய இந்நூலை எழுதத்தொடங்கினேன். எழுத்துச்சுதந்திரம் ... பேச்சுச் சுதந்திரம்... நடமாடும் சுதந்திரம் என்பன அப்போது தமிழ்நாடு மாநிலத்தின் ஆளுநராக இருந்த அலெக்சாந்தர் என்பவரால் தமிழீழ விடுதலைப் புலிகளுக்கு மட்டும் தடைசெய்யப்பட்டிருந்தது. எது எப்படி இருந்தபோதும், திலீபனின் உண்ணாவிரதம் பற்றிய இந்நூலை மிக விரைவில் எழுதிமுடித்துவிட வேண்டும் என்ற முயற்சியில், இரவு பகலாக முழுமூச்சுடன் ஈடுபட்டேன்; என் முயற்சிக்குத் துணையாக, திரு.ராஜன் இருந்தார். 1988 ஆடி மாதமளவில் மதுரை,சென்னை போன்ற தமிழ்நாட்டின் முக்கிய இடங்களில் அமைந்திருந்த எமது இயக்கத்தின் வசிப்பிடங்கள்,தமிழ்நாட்டுக்காவல் துறையினரால் முற்றுகை இடப்பட்டு, நாங்கள் அனைவரும் வீட்டுக்காவலில் வைக்கப்பட்டோம்.

இதற்கிடையில் தளபதி கிட்டுவுக்கும் இந்திய அரசுக்கும் இடையில், தொடர்ச்சியாகப் பேச்சுவார்த்தைகள் நடைபெற்றுக் கொண்டிருந்தன. இதில் “ரா” அமைப்பினரும் கலந்துகொண்டனர். தமிழ்நாட்டில் நாம் தொடர்ந்து எமது வசிப்பிடங்களை வைத்திருக்க வேண்டுமானால், பேச்சுவார்த்தையின் போது அதையாவது விட்டுக்கொடுக்க வேண்டும் என்று, இந்திய வல்லாதிக்கத்தின் அதிகாரிகள்,சிலர் எதிர்பார்த்தனர். அதற்காகவே வீட்டுக்காவலில் எம்மை வைத்துப் பணியவைக்க அவர்கள் முயன்றிருக்க வேண்டும். எமது மக்களின் எதிர்காலம் ஒன்றுக்காக, எதையும் விட்டுக் கொடுக்க முடியாத நிலையில், எமது கொள்கைகளில் உறுதியாக இருந்த எம்மை, 08.08.1988 அன்று அதிகாலை பன்னிரண்டு மணியளவில் நித்திரையில் எழுப்பிக் கைது செய்து கொண்டு சென்றார்கள், பேச்சுவார்த்தையில் நாம் பணியவேண்டுமென்பதற்காக ஏற்படுத்தப்பட்ட இரண்டாவது நெருக்குதல் இதுவென்று உணர்ந்து கொண்டோம். ஆனால், தளபதி கிட்டுவையும் அவருடன் இருந்த சிலரையும் அவர்கள் இந்தத் தருணத்தில் கைதுசெய்யாமல், தொடர்ந்து வீட்டுக் காவலிலேயே வைத்திருந்தனர். அப்போது இந்தியப் பிரதமராக இருந்த ராஜீவ் காந்தி அவர்கள், சென்னைக்குச் சுற்றுப்பயணம் செய்யவிருந்ததால் முன்னேற்பாடாக எம்மைக் கைது செய்வதாக சில உளவுப்படை அதிகாரிகள் கூறினார். ராஜீவ் தமிழ்நாட்டுக்கு வரும் வேளைகளிலெல்லாம் சிலகாலமாக எமது இயக்க உறுப்பினர்கள் கைது செய்யப்பட்டு, அவர் போனபின் விடுவிக்கப்படுவது வழக்கமாகையால் நாமும் இதுபற்றிப் பெரிதாக அலட்டிக்கொள்ளாமல் சிறையில் இருந்தோம்.

ஆனால், பேச்சுவார்த்தைகள் முற்றாகத் தோல்வியடைந்ததும் தளபதி கிட்டுவையும் அவர்கள் சிறையில் போட்டார்கள். அதுமட்டுமின்றி, தேசிய பாதுகாப்புச் சட்டத்தின்

கீழ் எம்மீது பொய்க் குற்றங்களையும் சுமத்தியிருந்தனர். நடக்கமுடியாத நிலையில் எம்மில் சிலர் சென்னைச் சிறைச்சாலையில் இருந்தனர். அதுபோல ஒரு சிலர் மதுரைச் சிறைச்சாலையிலும் இருந்தனர். மதுரைச் சிறைச்சாலையில் வைக்கப்பட்டிருந்தவர்களில் பலர் உறுப்புகளை இழந்த நிலையிலோ அல்லது பாரிய காயங்களுக்கோ சிகிச்சை பெற்றுக் கொண்டிருந்தவர்களாகும். இவர்களை ஈவிரக்கமற்ற முறையில் இந்திய வல்லாதிக்க அரசின் கைக்கூலிகள், கைகளில் மாட்டப்பட்டிருந்த குளுக்கோஸ் வயர்களைக் கழற்றி எறிந்துவிட்டு அம்புலன்சில் ஏற்றி சென்று சிறையில் தள்ளியதை, நாம் ஒருபோதும் மறந்துவிடமாட்டோம். இந்தியத் தேசிய பாதுகாப்புச் சட்டமானது ஒரு நபரை எதுவித நீதிமன்ற விசாரணையும் இன்றி, சிறைச்சாலையில் நிபந்தனையற்ற முறையில் ஒருவருடம் வரை தடுத்து வைப்பதற்கு இடமளிக்கிறது. 1988, ஆவணி மாத இறுதிவாரத்தில் கிட்டண்ணாவும், அவருடன் இருந்தவர்களும் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டு, எம்முடன் கொண்டுவந்து சென்னை மத்திய சிறைச்சாலையில் அடைத்து வைக்கப்பட்டனர்.

பேசுமட்டும் அவருடன் பேசிவிட்டு தமது எண்ணப்படி இறங்கி வரவில்லை என்பதற்காக அவரது பாதிக்கப்பட்ட உடல் நிலையைக்கூட எண்ணிப் பார்க்காமல், ஈவிரக்கமற்ற முறையில் அவரைச் சிறையில் தள்ளியது இந்திய ஏகாதிபத்தியத்தின் “ புளிச்சல் ஏவறை”யை எமக்கு மிகத் தெளிவாக எடுத்துகாட்டும் ஒரு செயலாகும். தமிழ்நாடு முழுவதும் தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தைச் சேர்ந்த 154 பேர் (பெண்கள் உட்பட) அப்போது கைதுசெய்யப்பட்டிருந்தனர். இப்படிச் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டோர் மீது, பாரிய பொய்க் குற்றங்களில் முக்கியமானது. சென்னையிலுள்ள பௌத்த விகாரையை வெடிவைத்துத் தகர்க்கும் நோக்கத்துடன் நண்பர்களுடன் சேர்ந்து திட்டம் போட்டதுமல்லாமல், அத்திட்டத்தை நிறைவேற்றச் செல்கையில் தாம் சந்தேகத்துடன் நெருங்கிய போது நான் தப்பமுயன்றது… இதில் ஒரு முக்கிய விடயம் என்னவென்றால், இதே குற்றத்துக்காக எம்மில் பலரின் பெயர்கள் போடப்பட்டிருந்தது தான் இதில் இன்னுமொரு அதிசயம் என்னவென்றால், சென்னையில் ஒரு பௌத்த விகாரை இருப்பதே எனக்குச் சிறையில் இருக்கும் போது தான் தெரியும். வின்சன்ட் என்ற எமது போராளி ஒருவருக்கு கண்ணிவெடி ஒன்றின் மூலம் முழங்காலின் கீழ் துண்டிக்கப்பட்டிருந்தது. அவரால் நடக்கவே முடியாது ஆனால், மூளை கெட்ட அதிகாரிகள் சிலர் அவர்மீதும் சில பொய்க் குற்றச்சாட்டுகளைச் சோடித்திருந்தனர். அவைகளில் ஒன்று, பௌத்த விகாரையில் வெடிவைப்பதற்குத் தயராக நின்றபோது காவல் துறையினரைக் கண்டுவிட்டு ஓடமுயன்றார் காவல் துறையினர் அவரைத் துரத்திப் பிடித்துக் கைது செய்தனர் என்பது தான். என்ன கற்பனை இது?

எம்மைத் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் உள்ளே தள்ளிய இந்திய அரசு,

வெளியுலகிற்குத் தான் சுத்தமான அரசு என்பதைக் காட்டுவதற்காக “ சதா சிவம் விசாரணைக் கொமிஷன்” என்ற விசாரணைக் குழு ஒன்றை நியமித்து, அதனிடம் எமது விசாரணையை ஒப்படைத்தது 26.09.1988 அன்று திலீபன் தியாக மரணமடைந்த முதலாண்டு நினைவு தினத்தன்று தான் இந்த விசாரணைக் குழுவினர், முதன்முதலாக எம்மை விசாரிக்க அழைத்திருந்தனர். அன்று சாட்சியமளிக்கச் சென்றவர்களில் நானும் ஒருவன். அன்று நாம் திலீபனின் நினைவாக ஒருநாள் முழுவதும் உண்ணாவிரதத்தைச் சிறையில் ஆரம்பித்திருந்தோம்.

அந்த நிலையில் கைகளில் விலங்கிடப்பட்டவாறு நாம் விசாரணைக் குழு முன்பாக அழைத்துச் செல்லப்பட்டோம். தமிழ்நாட்டு அரசியற் கட்சிப் பிரமுகர்கள் சிலர் எமக்காக சதாசிவம் விசாரணைக் குழு முன்னிலையில் சாட்சியமளித்தனர். அவர்களில் ஒருவர்தான் திரு.ஆற்காடு வீரசாமி. அவர் எடுத்துக் கூறியவற்றில் ஒன்று மட்டும் இன்னும் என் மனத்தில் அப்படியே பதிந்திருக்கிறது “போனவருடம் இதே தினத்தன்று உண்ணாவிரதத்தை மேற்கொண்டு தியாக மரணமடைந்த திலீபன் அவர்கள், ஐந்து கோரிக்கைகளை முன்வைத்துத் தன் போராட்டத்தை இந்திய அரசுக்கு எதிராக நடத்தினார். அவைகளில் ஒன்று, சிறையிலிருக்கும் தமிழ்க் கைதிகளை விடுவிக்க வேண்டும் என்பது. ஆனால் அவர் இறந்தபின் கூட இந்திய அரசு அதை நிறைவேற்றவில்லை அன்று இந்திய அரசிடம் , திலீபன் இக்கோரிக்கையை விடுவித்தபோது, தமிழ்க் கைதிகள் சிறீலங்காச் சிறைகளில் இருந்தனர். ஆனால், இன்று தமிழீழ விடுதலைப் புலிகளை இந்திய அரசு இந்த மண்ணிலேயே, தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ், பழிவாங்கும் நோக்குடன் கைது செய்து சிறையில் வைத்திருக்கிறது. அன்று இலங்கைச் சிறையிலிருந்த அரசியல் கைதிகளை இதே நாளில் விடுவிக்கும்படி, திலீபன் இந்திய அரசிடம் கேட்டான். இன்று அதே நாளில் இந்தியாவில் இருக்கும் இலங்கை அரசியல் கைதிகளை விடுவிக்கும்படி நாம் கேட்கவேண்டிய நிலை உள்ளது.

திலீபன் உண்ணாவிரதம் இருந்து ஈக மரணமடைந்த இந்தத் துக்கநாளில், தமிழீழ விடுதலைப் புலிப் போரளிகளை(கிட்டு உட்பட) விடுதலை செய்ய வேண்டும்மென்று, தாழ்மையுடன் வேண்டுகிறேன். எமது நாட்டிற்கு எம்மால் சிகிச்சைக்காக அழைத்துவரப்பட்டவர்களை நாமே சிறையில் போடுவது அநீதியானது ” என்று, அவர் கேட்டுக்கொண்டார். இந்த நூலின்அச்சுவேலைகள் இந்தியாவில் முடிவுற்று 26.09.1988 அன்று திரு. வை. கோபால் சாமி (நாடாளுமன்ற உறுப்பினர்) அவர்களின் தலைமையில் வெளியீட்டு விழா சென்னையில் நடைபெற்ற போது, அதற்காக உழைத்தவர்களில் நண்பர்கள் வோல்டர்,ராவ், முத்துராஜர், மூத்த உறுப்பினர் பேபி அண்ணா (இளங்குமரன்), முரளி, ராஜன், போன்றோர் முக்கியமானவர்கள்… அவர்களுக்கு நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன். இந்நூலை வெளியிடும்போது நான் சென்னை மத்திய சிறையில் இருந்தேன். ஆகவே வெளியீட்டு விழா முடிந்ததும்.இதன் பிரதிகள் சிலவற்றை என்னிடம் பல

கஷ்டங்களுக்கு மத்தியில் கொண்டுவந்து தந்த திரு.வை.கோபால்சாமி அவர்களுக்கும் என் நன்றிகள் உரித்தாகுக, இந்நூலை நான் எழுதிய போதும் இதை மிக ஒழுங்கான முறையில், பிரசுரத்திற்கு ஏற்றவாறு தட்டச்சில் பொறித்துத்தந்த, தமிழீழ விடுதலைப் புலிகளின் மூத்த உறுப்பினர் திரு. தேவர் அவர்களின் சேவையையும் என்னால் ஒரு போதும் மறக்கமுடியாது. மீண்டும் இந்நூலின் இரண்டாம் பதிப்பை வெளியிடும் முயற்சியில் என்னைச் சில வருடங்களுக்கு முன் தூண்டிய திரு.ராதேயன் (முன்னாள் “ ஈழநாதம் வாரமலர் ” ஆசிரியர்) அவர்கட்கும் எனது நன்றிகள் உரித்தாகுக.

கவிஞர் மு.வே.யோ.வாஞ்சிநாதன்

மாவடி வீதி, ஐந்து சந்தி, யாழ்ப்பாணம், தமிழீழம்.

புரட்டாதி, 1992.

**15.09.1987**

15.09.87 காலை மணி 8.30! தமிழீழப் போராட்ட வரலாற்றிலே வைரத் தூரிகை கொண்டு பொன் எழுத்துக்களால் பொறிக்கப்பட வேண்டிய நாள். ஆம்; தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் பிரிவுப் பொறுப்பாளரும், தமிழினத்தின் விடிவெள்ளியுமாகிய திலீபன் (இராசையா பார்த்திபன்) அவர்கள் நல்லூர் வடக்கு வீதியிலுள்ள கந்தன் கருணை இல்லத்தில் வாக்கிடோக்கி யுடன் நடுவராந்தாவில் அமர்ந்து கொண்டு புன்னகை தவழும் முகத்துடன், நண்பர்களுடன் அளவளாவிக் கொண்டிருக்கிறார்.

சொர்ணம், அன்ரன் மாஸ்டர், கவிஞர் காசி ஆனந்தன் போன்றோர் அங்கு இருக்கின்றார்கள்… கறுப்புநிற ட்ரவுசர், கோடு போட்ட வெள்ளை நிற (முழுக்கை) சேட், கண்ணில் கண்ணாடி… திலீபன் அன்று மிகவும் எடுப்பாகக் காட்சியளிக்கிறார்… வழக்கமாக கலைந்துகிடக்கும் தலைமுடியும், அழுக்கேறிய உடையுமாகக் காட்சி தரும் அவரை, எடுப்பான அந்தத் தோற்றத்தில் பார்த்தபோது எனக்கே ஆச்சரியமாக இருந்தது.

அவரை நோக்கி நடக்கிறேன்… ஹலோ மு.வே.யோ… என்ற இனிய பலாச்சுளைக் குரல் என்னை வரவேற்கிறது. திலீபன் இப்படித்தான் என்னை அழைப்பது வழக்கம். அவரருகே சென்றபோது பக்கத்தில் அமரும்படி என் தோள்கபிக் கட்டி அணைத்தவாறு கூறினார். கிட்டு அண்ணாவுக்கே உரிய இந்த பழக்கம் அவர் உருவாக்கிய திலீபனுக்கும் இருந்தது… அன்பானவர்களை அணைத்து வரவேற்பதில் இருவருமே கைதேர்ந்தவர்கள்… சாதாரண பொது மக்களும், சிறுவர்களும், பெண்களும் திலீபனை மிகவும் நேசித்ததற்குக் காரணம் அவரிடத்தில் குடிகொண்டிருந்தது. கனிவும், பரிவும், வார்த்தைகளின் இனிமையுமேயாகும்…. சிரித்த முகத்துடன் அவர் காட்சி தராத வேளை ஒன்று இருக்குமேயானால் அது உறங்கும்போதாகத்தான் இருக்க வேண்டும். அப்போதுகூட அவர் முகம் கடுமையாக இருந்ததை நான் பார்த்ததில்லை.

யாழ் மாவட்டத்திலுள்ள ஊரெழு என்னும் அழகிய பனைமரங்கள் கொஞ்சி விளையாடும் கிராமத்தில், ஆசிரியர் திரு.இராசையா தம்பதிகளின் கடைசி (நாலாவது) மகனாகப் பிறந்த (திலீபன்) பார்த்திபன் வாழ்வின் ஆரம்பத்திலேயே மிகவும் துர்ப்பாக்கியசாலியாக இருந்துவிட்டான். பத்து மாதம் வரை அன்புப்பால்

ஊட்டி, சீராட்டி, பாராட்டி வளர்த்த அன்னையின் அரவணைப்பைப் பத்தாவது மாத முடிவில் பறிகொடுத்துவிட்டான் திலீபன்.

பிஞ்சுக் கால்களை ஊன்றி அந்தக் குழந்தை தத்தித்தத்தி நடக்க வேண்டிய பருவத்தை, கொஞ்சி மகிழ்ந்த அன்னை நெஞ்சில் மகிழ்வோடு பார்க்க முடியாமல் பரலோகம் போய்விட்டார்… எத்தனை கொடுமை இது? உறவினர்களின் அரவணைப்பில் வளர்ந்த பார்த்திபன், தன் ஆரம்பக்கல்வியை ஊரெழுவிலும், யாழ் இந்துக் கல்லூரியிலும் கற்றான்.

1974-ஆம் ஆண்டு தை மாதம் யாழ் நகரில் நடைபெற்ற 2-ஆம் உலகத் தமிழராய்ச்சி மகா நாட்டில் மிகவும் ஆர்வத்துடன் கலந்துகொண்டான்… ஆனால் தமிழினத்தின் துரோகி ஒருவனின் கட்டளையின் மூலம் பத்து அப்பாவித் தமிழர்கள் அவன் கண் முன்னால் கொல்லப்பட்டதைக் கண்டு பார்த்திபனின் இதயம் துடிதுடித்தது… தமிழன் சுதந்திரமாக வாழ வேண்டுமென்ற விடுதலைத்தாகம் அந்த சிறு (10 வயதில்) வயதில் அவன் நெஞ்சில் நெருப்பாகப் பற்றத் தொடங்கியது.

யாழ் இந்துவில் பயிலும் போது, படிப்பிலும் விளையாட்டிலும் மிகவும் திறமைசாலியாக விளங்கினான். விளையாட்டுத்துறையின் தலைவனாகவும், சிறந்த சதுரங்க (செஸ்) விளையாட்டு வீரனாகவும் திகழ்ந்தான். 1977-ஆம் ஆண்டு இலங்கையில் நடைபெற்ற இனக்கலவரத்தில் யாழ்ப்பாணம் நோக்கிவந்த தமிழ் அகதிகளுக்கு தன்னால் முடிந்த உதவிகளைச் செய்தான். அப்போது அவனுக்கு வயது 13. அந்த இனக் கலவரம் திலீபனின் நெஞ்சில் சுதந்திர தாகத்தை வெகுவாகக் கிளப்பத் தொடங்கியது. அந்த வயதிலேயே விடுதலைப் புலிகளின் அதிரடித் தாக்குதல்களை மானசீகமாக மகிழ்ச்சி ததும்ப வரவேற்றான் திலீபன்…

தமிழ்த்துரோகி துரையப்பா கொலை செய்யப்பட்டபோது ஆனந்தக் கூத்தாடியவன் திலீபன்… 1982ஆம் ஆண்டு நடைபெற்ற கல்விப் பொதுத் தராதரம் பத்திரப்பரீட்சை (உயர்தரம்)யில் சகல பாடங்களிலும் சிறப்பான சித்திகளைப் பெற்று யாழ் பல்கலைக்கழக மருத்துவ பீடத்துக்குத் தெரிவானான். ஆனால் தமிழ் மக்கள் கொடுமையான முறையில் கொலை செய்யப்பட்டது கண்டு அவன் மனம் தவித்தது… தமிழ் மக்களைக் காப்பதற்காக தன் உயர்கல்வியை உதறித்தள்ளிய திலீபன், விடுதலை இயக்கத்தில் சேர்ந்து தமிழ் மண்ணுக்காகப் போராடத் தீர்மானித்தான்.

தமிழ் மக்களைக் காப்பதற்காக அல்லும் பகலும் போராடிக்கொண்டிருந்த தலைவர் வே.பிரபாகரனுடன் எப்படியாவது இணைய வேண்டுமென்பதே அவனது கனவாகவும் இலட்சியமாகவும் இருந்தது. தலைவர் பிரபாவைத் தன் மானசீகக் குருவாக வரித்துக்கொண்ட பார்த்திபன் (திலீபன்) 1983-ஆம் ஆண்டு தமிழீழ

விடுதலைப் புலிகள் இயக்கத்தில் அங்கத்தனவாக சேர்ந்தான்…… ஆரம்பத்தில் கப்டன் பண்டிதருடன் இணைந்து பிரச்சார வேலைகளைக் கவனித்துவந்த அவன் பின் மானிப்பாய், வட்டுக்கோட்டைப் பகுதியில் பிரச்சாரப் பொறுப்பாளனாக நியமிக்கப்பட்டான்… 1983ஆம் ஆண்டின் கடைசிப் பகுதியில் தமிழ்ப்பகுதியில் பிரச்சார வேலைகளில் ஈடுபட்ட விடுதலை புலிகளுக்கு தலைக்கு மேல் ஆபத்து இருந்தது என்பது எல்லோருக்கும் தெரியும்… இந்த ஆபத்து இராணுவத்திடமிருந்து மட்டுமல்ல… வேறு பல வழிகளிலும் உண்டு. இவைகளிலெல்லாம் எதிர்நீச்சல் போட்டு தன் பணியில் வெற்றி கண்டவன் திலீபன்.

தமிழீழ விடுதலைப் புலிகளின் யாழ் பிராந்திய தளபதியாகக் கடமையாற்றிய திரு. கிட்டு அண்ணா திலீபனின் செயல் திறனிலும், அயாராத முயற்சியிலும் நம்பிக்கை வைத்தார். கடமை, கண்ணியம், கட்டுப்பாடு, உறுதி, உழைப்பு எல்லாவற்றிலுமே திறமையாகத் திகழ்ந்த திலீபன் அவர்களை தமிழீழ விடுதலைப் புலிகளின் அரசியல் பிரிவுப் பொறுப்பாளனாக நியமிக்கும்படி தலைவர் பிரபாவிடம் சிபாரிசு செய்தார் கிட்டு.

திலீபன் அந்த பொறுப்புக்கு நியமிக்கப்பட்ட பின், தமிழீழ விடுதலைப் புலிகளின் வரலாற்றில் ஓர் புதிய அத்தியாயம் ஆரம்பமாயிற்று.

திலீபன் தமிழ் மக்களை அரசியல் மயப்படுத்துவதற்காக அதற்காக அல்லும் பகலும் உழைத்த அதேவேளை, தளபதி கிட்டுவுடன் இணைந்து பல தாக்குதல் திட்டங்களையும் வகுத்தான். அநேக தாக்குதல்களில் தானே நேரடியாக ஆயுதமேந்திப் போராடினான்… பலமுறை இராணுவத்திடம் பிடிபட்டுத் தாக்கினான். வல்வையில் ஏற்பட்ட விடுதலைப் புலிகள் - இராணுவ நேரடி மோதல் ஒன்றில் வயிற்றில் குண்டு பாய்ந்து சத்திர சிகிச்சைக்கு ஆளாக்கப்பட்டான். அப்போது அவனது குடலின் 14 அங்குலம் வெட்டி வீசப்பட்டது. அதையும் தமிழினத்துக்காக ஏற்றுக்கொண்டான். மூன்று முறை சந்திரசிகிச்சை செய்யப்பட்ட அவன், மிகவும் பலவீனமடைந்தான். ஆனால் மன உறுதிமட்டும் தளரவில்லை.

“களத்தில்” என்ற மாதப் பத்திரிக்கையை நடாத்தி தன் எண்ணங்களை எழுத்துருவில் வடித்தார்…. இயக்கக் கொள்கைகளை மிக எளிதாக மக்களுக்கு விளங்கவைத்தார். “களத்தில்” பத்திரிக்கையின் இறுதி இரு இதழ்களிலும் திலீபனுடன் இணைந்து பணியாற்றும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது…. அப்போது அவரது ஆற்றலை நன்கு அறியும் சந்தர்ப்பம் எனக்கு ஏற்பட்டது. கட்டுரைகளை எழுதும்போது அவை மக்களுக்கு புரியக்கூடியவாறு இருக்க வேண்டும் என்பதில் கவனமாக இருந்தார். அதையே எனக்கும் அடிக்கடி கூறுவார். திலீபனின் முயற்சியினால் பல உப - ஸ்தாபனங்கள் தமிழீழ விடுதலைப் புலிகளின் பண்ணையில் விளைந்து அதிக பலனைக் கொடுக்கத் தொடங்கின… அவைகளில் பலம் வாய்ந்த சிலவற்றை இங்கு தருகிறேன்,

1. தமிழீழ விடுதலைப் புலிகளின் மாணவர் இயக்கம் (ந.ஞ.க.ப)
2. தமிழீழ மகளிர் அமைப்பு.
3. சுதந்திரப் பறவைகள் அமைப்பு.
4. தமிழீழ தேசபக்தர் அமைப்பு.
5. தமிழீழ விழிப்புக் குழுக்கள்
6. தமிழீழக் கிராமிய நீதிமன்றங்கள்.
7. சுதேச உற்பத்திக் குழுக்கள்
8. ‘தமிழீழ ஒலி ஒளி சேவைக் கட்டுப்பாட்டுச் சபை’
9. தமிழர் கலாசார அவை மற்றும் சில தொழிற் சங்கங்களும் திலீபனால் அமைக்கப்பட்டு மிகத் திறமையாகச் செயற்பட்டு வருகின்றன.

காலை 9.30 மணி! பாடசாலை பிள்ளைகள் வரிசையாக வந்து திலீபனைச் சந்தித்து விடைபெறுகிறார்கள். எல்லோருடனும் அவர் அன்பாகப் பேசுகிறார். “ வோக்கிடோக்கி” யில் தலைவருடன் சில நிமிடங்கள் பேசுகிறார். பேசிவிட்டு அந்த மண்ணிற “ வானை” நோக்கி நடக்கிறார்… எல்லோரும் பின் தொடர்கிறோம்… ஆம், அவரின் தியாகப் பயணம் ஆரம்பமாகி விட்டது. மிக மிடுக்காக நடந்து முன் ஆசனத்தில் ஏறுகிறார். அவரின் பக்கத்தில் சொர்ணம், அன்ரன் மாஸ்ரர், முரளி, பின் ஆசனத்தில் காசி ஆனந்தன், ராஜன், நான், மற்றும் சிலர்…! வான் நல்லூர் கந்தசாமி கோயிலை நோக்கி ஓடுகிறது… பாதையின் இரு பக்கத்திலும் மாணவர்கள், பொதுமக்கள் ஆகியோர் கையசைத்து வழியனுப்புகிறார்கள்.

வான் நின்றதும், பிரதித் தலைவர் மாத்தயா, எதிர்வந்து நின்று, திலீபனைக் கட்டி அணைத்து வரவேற்று, உண்ணாவிராத மேடைக்கு அழைத்துச் செல்கிறார். நாங்களும் பின்னால் போய்க் கொண்டிக்கிறோம்… எதிர்பாராத விதமாக அந்த நிகழ்ச்சி நடக்கிறது. வயதான ஒர் அம்மா… தள்ளாடிய சிவந்த நிற மேனி, பழுத்த தலை, ஆனால் ஒளி தவழும் கண்களில் கண்ணீர் மல்க, திலீபனை மறித்து, தன் கையில் சுமந்துவந்த அர்ச்சனைச் சரையிலிருந்து நடுங்கும் விரல்களால் திருநீற்றை எடுத்து திலீபனின் நெற்றியில் பூசுகிறார்… சுற்றியிருந்த “ கமெரா” க்கள் எல்லாம் அந்தக் காட்சியைக் “ கிளிக்” செய்கின்றன. வீரத்திலகமிடுகிறார் அந்தத் தாய்… தாயற்ற திலீபன் அந்தத் தாயின் பாச உணர்வில் மூழ்கிப்போய் விடுகிறார்… காலை 9.45 மணி உண்ணாவிரத மேடையிலே உள்ள நாற்காலியில் திலீபனை அமர வைக்கிறார், தமிழீழ விடுதலைப் புலிகளின் பிரதித் தலைவர்

மாத்தயா அவர்கள்… எனக்கு அப்போது ஒரு நிகழ்ச்சி ஞாபகத்துக்கு வந்தது.

நெல்லியடி இராணுவ முகாம் தாக்குதலுக்கு முன்பாக கப்டன் மில்லரிடம் திட்டத்தை ஒப்படைத்து வழியனுப்பி வைக்கிறார் மாத்தயா… அன்று மில்லர் வீரத்துக்குக் காவியம் ஒன்றையே படைத்துவிட்டு வீரமரணம் அடைந்தான். இன்று திலீபன்…? திலீபனின் அருகே நான், ராஜன், பிரசாத், சிறீ ஆகியோர் அமர்ந்திருக்கிறோம். திலீபனின் தியாகப் பயணம் ஆரம்பமாகிவிட்டது. அங்கு பக்கத்திலிருந்த மேடையில் பிரசாத் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. திரு. நடேசன்,காசி ஆனந்தன் ஆகியோர் திலீபனின் உண்ணாவிரதம் எதற்காக ஆரம்பிக்கப்படுகிறது என்பது பற்றி விளக்கமளித்தார்கள்… தமிழ் மக்களினதும் தமிழர் தாயகத்தினதும் உரிமைகளைப் பேணும் நோக்கமாக, இந்தியா மக்களினது கவனத்தை ஈர்க்கும் வகையில், தமிழீழ விடுதலைப் புலிகளால் முன்வைக்கப்பட்ட ஐந்து கோரிக்கைகளும் பின்வருவன:

1. பயங்கரவாதத் தடைச் சட்டத்தின் கீழ் இன்னும் தடுப்புக் காவலில் அல்லது சிறைகளில் உள்ளோர் விடுவிக்கப்பட வேண்டும்.

2. புனர்வாழ்வு என்ற பெயரில் தமிழர் தாயகத்தில் நடத்தப்படும் சிங்களக் குடியேற்றம், உடனடியாக நிறுத்தப்படல் வேண்டும்.

3. இடைக்கால அரசு நிறுவப்படும் வரை “ புனர்வாழ்வு” என்று அழைக்கப்படும் சகல வேலைகளும் நிறுத்தப்பட வேண்டும்.

4. வடக்கு - கிழக்கு மாகாணங்களில் பொலிஸ் நிலையங்கள் திறக்கப்படுவது உடனடியாக நிறுத்தப்பட வேண்டும்.

5. இந்திய அமைதிப்படையின் மேற்பார்வையில், ஊர்க்காவல் படை என அழைக்கப்படுவோருக்கு வழங்கப்பெற்ற ஆயுதங்கள் திரும்பப் பெறப்பட்டு, தமிழ்க் கிராமங்கள், பள்ளிக்கூடங்கள்ஆகியவற்றில் குடிகொண்டுள்ள இராணுவ, பொலிஸ் நிலையங்கள் மூடப்பட வேண்டும்.

பிரசாத் அவர்களால் மேற்படி ஐந்து கோரிக்கைகளும் வாசிக்கப்பட்டன.

இதே கோரிக்கைகளை 13.09.1987 அன்று இந்தியா உயர் ஸ்தானிகரின் கையில் நேரடியாகக் கிடைக்ககூடியதாக அனுப்பி 24 மணித்தியால அவகாசமும் கொடுத்திருந்தார்கள்… ஆனால் 15.09.1987 வரை எந்தப் பதிலும் தூதுவரிடமிருந்து கிடைக்காத காரணத்தினால் சாகும்வரை உண்ணாவிரதமும், மறியல் போராட்டமும் நடத்துவதென தமிழீழ விடுதலைப் புலிகளின் பிரதேசப் பொறுப்பாளர்களின் கூட்டத்தில் 13.09.1987 அன்று தீர்மானிக்கப்பட்டது அதன்படிதான் திலீபனின் தியாகப் பயணம் ஆரம்பித்தது…

பிற்பகல் 2.00 மணி! திலீபன் கம்பீரமாக வீற்றிருக்கிறார். உண்ணாவிரதம் ஆரம்பிக்கப்பட்டு இரண்டு மணித்தி யாலங்கள் முடிந்துவிட்டன. இரண்டாவது மேடையிலே நடைபெற்றுக் கொண்டிருந்த உண்ணாவிரத விளக்கக் கூட்டம் முடிவடைந்துவிட்டது " படிப்பதற்குப் புத்தங்கள் வேண்டும்" என்று என் காதுக்குள் குசுகுசுக்கிறார் திலீபன்: நான் ராஜனிடம் சொல்கிறேன் பதினைந்து நிமிடங்களில் பல அரிய நூல்கள் மேடைக்கு வருகின்றன. விடுதலைப் போராட்டங்கள் பற்றி அறிவதில் திலீபனுக்கு மிகுந்த ஆர்வம் எப்போதுமே உண்டு. பிடல் காஸ்ட்ரோ, சேகுவேரா, ஹோசிமின், யாசர் அராபத் போன்றவர்களின் வாழ்க்கையைப் பற்றிய நூல்களை நேரம் கிடைக்கும்போது படிப்பார்.

பலாஸ்தீன் மக்களின் வாழ்க்கையைப் பற்றிப் படிப்பதென்றால் அவருக்குப் பலாச்சுளைமா திரிப் பிடிக்கும். " பலஸ்தீனக் கவிதைகள்" என்ற நூலை அவரிடம் கொடுத்தேன். அதை மிகவும் ஆர்வத்துடன் படிக்க தொடங்கினார். மாலை 5.00 மணிக்கு பக்கத்து மேடையிலே நிகழ்ச்சிகள் ஆரம்பமாயிற்று பாடசாலை மாணவிகள் போட்டி போட்டுக்கொண்டு கவிதைகளை வாசிக்கத் தெடங்கினர். சுசிலா என்ற மாணவி மிகவும் உணர்ச்சிவசப்பட்டு தன் கவிதையை வாசித்துக் கொண்டிருந்தார். அப்போது ஒரு கட்டத்தில் அவர் அழுதேவிட்டார் " அண்ணா திலீபா ! இளம் வயதில் உண்ணாமல் தமிழினத்துக்காக... நீ தவமிருக்கும் கோலத்தைக் காணும் தாய்க்குலத்தின் கண்களில் வடிவது... செந்நீர்!... சுசிலாவின் விம்மலால், திலீபனின் கவனத்தைத் திருப்புகிறது. கவிதை தொகுப்பை முடித்துவிட்டு (பலஸ்தீனக் கவிதைகள்), கவிதை மழையில் நனையத் தொடங்கினார். அவர் விழிகளில் முட்டிய நீர்த்தேக்கத்தை ஒரு கணம் என் கண்கள் காணத் தவறவில்லை.

எத்தனை இளகிய மனம் அவருக்கு? இந்த இளம் குருத்து இன்னும் எத்தனை நாட்களுக்கு ஒரு சொட்டு நீர் கூட அருந்தாமல் வாடி வதங்கப் போகிறது? அகிம்சைப் போராட்டத்துக்கே ஆணிவேராகத் திகழ்ந்த அண்ணல் காந்தியடிகள் கூட, தனது உண்ணாவிரதப் போராட்டங்களை நீராகாரம் அருந்தித்தானே நடத்தினார்! ஏன்? போராட்ட வீரன் " பொபி சாண்ட்ஸ்" என்ன செய்தான்? சிறைக்குள்,நீராகரம் அருந்தித்தான் உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பித்து உயிர்நீத்தான். இந்தியாவின் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த திரு.பொட்டி ஸ்ரீ ராமுலு என்பவரும் அதே முறையில்தான் உண்ணாவிரதம் இருந்து, இறுதியில் தியாக மரணம் அடைந்தார். 1956 ஒகஸ்ட் 27 இல்,சென்னை மாகாணத்துக்கு தமிழ்நாடு என்று பெயர் சூட்டக் கோரி உண்ணாவிரதத்தை ஆரம்பித்த 63 வயதான விருதுநகர் சங்கரலிங்க நாடார் 78 ஆவது நாள் அவரது கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்படாமல் உயிர்துறந்தார்(13 ஆண்டுகளுக்குப்பின் பேரறிஞர் அண்ணாவால், 1969 இல் சென்னை மாகாணத்துக்குத் தமிழ்நாடு என்ற பெயர் சூட்டப்பட்டது).

பகத்சிங்கின் தோழரான வங்காளத்தைச் சேர்ந்த ஜதீந்திர நாத்தாஸ் என்ற இளைஞன் 13.07.1929 இல் லாகூர் சிறையில், சிறைக்கொடுமைகளை எதிர்த்து உண்ணாவிரதமிருந்து 13.09.1929 அன்று, 63 ஆம் நாள் வீரமரணமடைந்தார்(அதன் பின் சிறைச்சாலை விதிகள் தளர்த்தப்பட்டன). ஆனால் நம் திலீபன்? உலகத்திலேயே நான் அறிந்தவரையில் இரண்டாவதாக, ஒரு சொட்டு நீர்கூட அருந்தாமல் உண்ணாவிரதத்தை ஆரம்பித்தவர் என்ற பெருமதிப்பை பெறுகிறார். அப்படியானால் அந்த முதல் நபர் யார்? அவர் வேறு யாருமல்ல: தமிழீழ விடுதலைப் புலிகளின் தலைவர் வே.பிரபாகரன் தான்! 1986 ஆம்ஆண்டு நொவம்பர் மாதம் இந்தியாவில் அவர் இருந்த போது, தகவல் தொடர்புச் சாதனங்களை இந்திய அரசு கைப்பற்றியதைக் கண்டித்து , ஒரு சொட்டு நீர்கூட அருந்தாமல் சாகும் வரை உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பித்து , உலகில் புதிய அத்தியாயம் ஒன்றை ஆரம்பித்துவைத்த பெருமை அவரையே சாரும்.

இரண்டாம் நாளே இந்திய அரசு பணிந்ததால் அந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் அவர் வெற்றி பெற்றார். அதுபோல், அவரால் உருவாக்கப்பட்ட திலீபன் இன்று குதித்து விட்டார். அவரது கோரிக்கைகளை இந்திய அரசு நிறைவேற்றுமானால் அவர் உண்ணாவிரதத்தைக் கைவிடத் தயார். இல்லையென்றால் இறுதிமூச்சுவரை அதைத் தொடரத் தயாராக இருந்தார்.திலீபன் மிகவும் மன உறுதி படைத்தவர். ஒல்லியான உடலாயினும் திடமான இதயம் அவரிடம் இருந்தது. தன்னம்பிக்கையும் விடாமுயற்சியும் இருக்கும் வரை எதையும் சாதிக்கலாம் என்ற தலைவர் பிரபாகரனின் அசையாத கொள்கையிலே பற்று வைத்திருப்பவர் திலீபன். அவரது கோரிக்கைகள் நிறைவேறுமா?… காலம்தான் பதில் சொல்லவேண்டும். இந்த உண்ணாவிரதம் அரசின் தலையீட்டினால் வெற்றி பெறுமானால் அந்த வெற்றி திலீபனைச் சாரும்.

அதுபோல் இந்திய அரசு நடவடிக்கை எடுக்காமல் இறுதிவரை உண்ணாவிரதம் இருந்தே திலீபன் இறக்க நேரிட்டால்…? அதில் கிடைக்கும் தோல்வியும் திலீபனுக்கு ஓர் மாபெரும் வெற்றிதான். உலகில் புதிய அத்தியாயம் ஒன்றின் “சிருஷ்டி கர்த்தா” என்ற பெருமை அவனையே சாரும். ஆனால், அதற்காக எங்கள் குல விளக்கை நாமே அணைக்க வேண்டுமா? இறைவா! திலீபனைக் காப்பாற்றிவிடு! கூடியிருந்த மக்கள் நல்லூர்க் கந்தனிடம் அடிக்கடி இப்படி வேண்டிக்கொள்கிறார்கள். இதை நான் அவதானிக்கிறேன். பழந்தமிழ் மன்னாகிய சங்கிலியன் அரசாண்ட நல்லூர் அரசதானியிலே …அதுவும் தமிழ்க் கடவுளாகிய குமரனின் சன்னதியில்… ஒரு இளம்புலி உண்ணாமல் துவண்டு கிடக்கிறது… ஒரு நல்ல முடிவு கிடைக்கவேண்டும் இல்லையேல் உலகில் நீதி செத்துவிடும். எனக்குள் இப்படி எண்ணிக் கொள்கிறேன்.

அப்போது ஓர் இளைஞன் மேடையில் முழங்கிக் கொண்டிருக்கிறான் “திலீபன் அண்ணாவின் கோரிக்கைகள் மட்டுமல்ல தமிழ் மக்களின் கோரிக்கைகளும்

இதுதான். இதை நிறைவேற்ற வேண்டியது இந்திய அரசின் கடமையாகும்…அவர் தமிழீழம் தாருங்கள் என்பதற்காக உண்ணாவிரதம் இருக்கவில்லை இந்திய - இலங்கை ஒப்பந்தத்தில் குறிப்பிட்டுள்ள ஐந்தே ஐந்து கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வற்புறுத்தித் தான் சாகும்வரை உண்ணாவிரதத்தை ஆரம்பித்திருக்கிறார். எந்த காரணத்தாலாவது இதை இந்திய அரசு நிறைவேற்றத் தவறுமானால், திலீபன் அண்ணா இறப்பது நிச்சயம்… திலீபன் அண்ணா இறந்தால்… ஒரு பூகம்பம் இங்கே வெடிக்கும்: ஒரு புரட்சி இங்கே வெடிக்கும்… இதுதான் என்னால் கூறமுடியும்"வரின் பேச்சு முடிந்ததும் கூடியிருந்த மக்கள், அந்தப் பேச்சை வரவேற்பது போல் கைகளைத்தட்டி ஆரவாரஞ்செய்கின்றனர். இந்த ஒலி அடங்க வெகு நேரம் பிடிக்கின்றது.

அன்று இரவு பதினொரு மணியளவில் தலைவர் வே.பிரபாகரன் திலீபனைப் பார்ப்பதற்காக மேடைக்கு வருகிறார். அவருடன் சொர்ணம், இம்ரான், அஜித், சங்கர், மாத்தையா, ஜொனி இப்படி பலரும் வருகின்றனர். வெகுநேரம்வரை தலைவருடன் உரையாடிக் கொண்டிருந்தார் திலீபன். யாரையும் அதிக நேரம் பேச அனுமதிக்க வேண்டாம் என்று, போகும்போது என்னிடம் கூறிவிட்டுச் சென்றார் தலைவர். நீர், உணவு உட்கொள்ளாத ஒருவர், தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தால் விரைவில் களைப்படைந்துவிடுவார். அதனால்தான் தலைவர் அப்படிக் கூறிவிட்டுச் சென்றார். அன்றிரவு பத்திரிகைத் துறையைச் சார்ந்தவர்களும் திலீபனைப் பார்க்க மேடைக்கு வந்தனர். “முரசொலி” ஆசிரியர் திருச்செல்வம், ஈழமுரசைச் சேர்ந்த பஷீர் போன்றோருடன் திலீபன் மனம்திறந்து பேசினார். அவரைக் கட்டுபடுத்த எனக்கு மிகவும் சங்கடமாக இருந்தது. அதிகம் பேசி உடம்பைக் கெடுத்துக்கொள்ளப் போகிறாரே என்பதனால் அவரை அன்பாகக் கடிந்து கொண்டேன். இரவு 11.30 மணியளவில் கஷ்டப்பட்டு சிறுநீர் கழித்துவிட்டு, சுமார் 12 மணியளவில் படுக்கைக்குச் சென்றார். அவர் ஆழ்ந்து உறங்கத் தொடங்கியபோது நேரம் 1.30 மணி, அவரின் நாடித்துடிப்பைப் பிடித்து அவதானிக்கிறேன். நாடிதுடிப்பு :88 சுவாசத்துடிப்பு :20 அவர் சுயநினைவுடன் இருக்கும்போது வைத்திய பரிசோதனை செய்வதற்க்கு அனுமதிக்கமாட்டார். தனக்கு உயிர்மீது ஆசையில்லை என்பதால் பரிசோதனை தேவையில்லை என்று கூறுவார். அவர் விருப்பத்துக்கு மாறாக உணவோ நீரோ மருந்துவமோ இறுதிவரை அளிக்க கூடாதென்று முதல் நாளே என்னிடம் சத்தியம் வாங்கிவிட்டார்.

நானும் ராஜனும் அவரின் பக்கத்தில் படுத்துவிட்டோம். மேடையின் மறுபுறத்தில் இரு ‘நவீனன்களும்’ படுக்கை போட்டனர். மேடைக்கு முன்பாக மகளிர் அமைப்பு உறுப்பினர்களும், பொது மக்களும் கொட்டக் கொட்ட கண் விழித்துக் கொண்டிருந்தனர்.

**16.09.1987**

அதிகாலை 5.00 மணிக்கே திலீபன் உறக்கத்தை விட்டு எழுந்து விட்டார் முகம் கழுவித் தலைவாரிக் கொண்டார் சிறுநீர் கழித்தார், ஆனால் மலம் இன்னும் போகவில்லை அவர் முகம் சோர்வாகக் காணப்பட்டாலும், அதைக் காட்டிக் கொள்ளாமல் எல்லோருடன் சிரித்துப் பேசிக்கொண்டிருந்தார். சகல தினசரிப் பத்திரிகைகளையும் ஒன்றுவிடாமல் படித்து முடித்தார் பத்து மணியளவில் பக்கத்து மேடையிலே நிகழ்சிகள் ஆரம்பமாயின நிகழ்ச்சிகளுக்குத் தேவர் தலைமைதாங்கிக் கொண்டிருந்தார் கவிதைகளை படிப்பதற்காக இளம் சந்ததியினர் முண்டியடித்துத்

தம் பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருந்தனர் "நிதர்சனம்" ஒளிபரப்பாளர்களின் வீடியோ கமெரா, நாலா பக்கங்களிலும் சுழன்று படம் பிடித்துக் கொண்டிருந்தது மேடையில் கவிதைகள் முழங்கி கொண்டிருந்தபோது திலீபன் என் காதுக்குள் குசுகுசுத்தார். "நான் பேசப்போகின்றேன் மைக்கை வாங்கித் தாருங்கோ வாஞ்சியண்ணை…" "சாப்பிடாமல் குடிக்காமல் இருக்கிறீங்கள், களைத்து விடுவீங்கள்…" என்று அவரைத் தடுக்க முயன்றேன் "இரண்டு நிமிசம் மட்டும் நிற்பாட்டிவிடுவேன் பிளீஸ்… மைக்கை வாங்கித் தாங்கோ…" என்று குரல் தளதளக்கக் கூறினார். அவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. கண்கள் குழிவிழுந்து முகம் சோர்ந்து காணப்பட்டாலும் அந்தப் பசுமையான சிரிப்பு மட்டும் இன்னும் மாறாமல் அப்படியே இருந்தது. இரண்டு நிமிடத்துக்கு மேல் பேசக்கூடாது என்ற நிபந்தனையுடன் மேடையில் நின்ற தேவரிடம் மைக்கைப் பெற்று கொடுக்கிறேன். திலீபன் பேசப்போவதை தேவர் ஒலிபெருக்கியில் அறிவித்ததும் மக்கள் கூட்டம் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தது திலீபன் பேசுகிறார்…! "எனது அன்பிற்கும் மதிப்பிற்குரிய மக்கள் அனைவருக்கும் எனது வணக்கம் நின்றுகொண்டு பேசமுடியாத நிலையில் இருப்பதால் இருந்து பேசுகின்றேன்.

நாளை நான் சுய நினைவுடன் இருப்பேனோ என்று தெரியாது. அதனால் இன்று உங்களுடன் பேச விரும்பினேன். நாம் எமது இலட்சியத்தில் உறுதியாக இருக்கின்றோம். அறுநூற்று ஐம்பது பேர் இன்று வரை மரணித்துள்ளோம் மில்லர் இறுதியாகப் போகும்போது என்னிடம் ஒரு வரி கூறினான். நான் அவனுடன் இறுதிவரை இருந்தேன் "நான் எனது தாய்நாட்டிற்காக உயிர் துறப்பதை எண்ணும் போது மகிழ்ச்சியும் திருப்தியும் அடைகிறேன். மக்கள் விடுதலை அடையும்

காட்சியை என் கண்ணால் காணமுடியாது என்பதே ஒரே ஏக்கம்"என்று கூறிவிட்டு வெடிமருந்து நிரப்பிய லொறியை எடுத்துச் சென்றான். இறந்த அறுநூற்று ஐம்பது பேரும் அநேகமாக எனக்குத் தெரிந்துதான் மரணித்தார்கள் அதனை நான் மறக்கமாட்டேன். உண்ணாவிரதப் போராட்டத்தை ஆரம்பிக்கத் தலைவரின் அனுமதியினைக் கேட்டேன், அப்போது தலைவர் கூறிய வரிகள் எனது நினைவில் உள்ளன. "திலீபன் ! நீ முன்னால் போ நான் பின்னால் வருகிறேன்" என்று அவர் கூறினார். அத்தைகைய ஒரு தெளிவான தலைவனை, தனது உயிரைச் சிறிது கூட மதிக்காத தலைவனை நீங்கள் பெற்றிருக்கிறீர்கள்.

அந்த மாபெரும் வீரனின் தலைமையில் ஒரு மக்கள் புரட்சி இங்கு வெடிக்கும். அது நிச்சயம் தமிழீழத்தை, தமிழர்களின் அடிப்படை உறிமைகளைப் பெற்றுத் தரும். இதனை வானத்தில் இருந்து பர்த்து மகிழ்வேன். நான் மனரீதியாக, ஆத்மார்த்தமாக எமது மக்கள் விடுதலை அடைவார்கள் என உணர்கிறேன்.மகிழ்ச்சியுடன் பூர்ண திருப்தியுடன் உங்களிடமிருந்து விடைபெறுகிறேன். விடுதலைப் புலிகள் உயிரிலும் மேலாக சிறுவர்களை சகோதரிகளை, தாய்மார்களை, தந்தையர்களை நினைக்கின்றார்கள். உண்மையான, உறுதியான இலட்சியம் அந்த இலட்சியத்தை எமது தலைவருடன் சேர்ந்து நீங்கள் அடையுங்கள் எனது விருப்பமும் இதுதான்" மிகவும் ஆறுதலாக சோர்வுடன் ஆனால் திடமாகப் பேசிய அவரின் பேச்சைக் கேட்டு மக்கள் கண்ணீர் சிந்தினர்…

அன்றிரவு தலைவர் வந்து திலீபனைப் பார்த்தார் சோர்வுடன் படுத்திருந்த திலீபனின் தலையை அவர் தன் கரங்களால் வருடினார். ஒரு தகப்பனின் அன்பையும் தாயின் பாசத்தையும் ஒன்றாகக் குழைத்தது போன்றிருந்தது அந்த வருடல், இரண்டு இமய மலைகளையும் என் கண்கள் விழுங்கிக்கொண்டிருந்தன. இரவு 12 மணிக்கு திலீபன் உறங்கத் தொடங்கினார். நானும் அவர் அருகிலேயே படுத்துவிட்டேன். திலீபனின் வீட்டில் குணபாலன் என்ற சிறுவன் வேலை செய்வதற்காக இருந்தான் அவனது வறுமை நிலையைக் கண்ட திலீபன் தன் கையில் கிடைக்கும் பணத்தை அவனிடம் அடிக்கடி கொடுப்பார். யாழ் இந்துவில் அவர் படிக்கும்போது, வீட்டுக்கு வரும்போதெல்லாம் குணபாலனுக்கு கைநிறைய 'டொபி' களுடன் வருவார். குணபாலனுக்கு டி.வி. பார்க்கும் பழக்கம் இருந்தது தன் வேலைகளை முடித்துவிட்டு இரவு எட்டு மணிக்குபின் பக்கத்துவீட்டிற்குச் சென்று அவன் டி.வி. பார்ப்பது வழக்கம்.

*அய்யா* **நெடுமாறன்**

## *எழுதிய* **"பிரபாகரன்"** *என்ற* **நூலிலிருந்து...**



. . . "திலீபனின் உண்ணாவிரதத்திற்கு ஆதரவாக யாழ் மாணவர்கள் நடத்திய பிரமாண்டமான ஊர்வலத்தை நான் பார்த்தேன். சுமார் இலட்சம் பேருக்கு மேல் அணிவகுத்து சென்றார்கள். இந்தியாவுக்கு எதிரான உணர்வு அந்த ஊர்வலத்தில் கொப்பளித்தது. இத்தகைய உணர்வு தமிழர்களிடம் உருவாக வேண்டும் என்று ஜெயவர்த்தனா விரும்பினார். அதனால்தான் இந்திய இராணுவத்தை வரவழைத்தார். அவரின் இந்த சூழ்ச்சியைப் புரிந்துகொள்ளாமல் ராஜீவ் நடந்துகொண்டதின்விளைவாக இந்திய எதிர்ப்புணர்வு அங்கு கொளுந்துவிட்டு எரிவதையும் நான் பார்த்தேன்.

செப்டம்பர் 26 ஆம் தேதியன்று காலையில் திலீபனின் உடல்நிலை மிக மோசமான கட்டத்தை அடைந்தது. இனி அவர் பிழைக்கப்போவதில்லை என்பது எல்லோருக்கும்தெரிந்தது. அந்த வேளையில் பிரபாகரனுடன் பேச்சுநடத்த தீட்சித் பலாலி இராணுவமுகாமுக்கு வந்தார். அந்த துயரமானவேளையில் யாராகயிருந்தாலும் பேச்சுவார்த்தைக்குப் போகமாட்டார்கள். ஆனால் அவர் நிதானம் தவறாமல் இருந்தார். தனது அருமை தோழன் மரணத்தின்வாயிலில் நிற்கிறான் என்பதனால் ஏற்பட்ட சோகம் அவர் முகத்தில் வெளிப்படையாகவே தெரிந்தது. ஆனாலும்கூட தன்னுடைய மக்களுக்கு ஆற்றவேண்டிய கடமையைச் செய்யவேண்டுமென்று விரும்பினார். தன்னுடைய சகாக்களை அழைத்து திலீபன் விஷயமாக எது நேர்ந்தாலும் உடனே தனக்குத் தகவல் தெரிவிக்கும்படி கூறிவிட்டு பலாலி இராணுவமுகாமுக்குச் சென்றார். அவர் இராணுவமுகாமுக்கு போய்ச் சேருவதற்குள்ளாகவே திலீபன் மரணத்தை தழுவிக்கொண்டார். கவிஞர் காசி ஆனந்தனும், நானும் மற்றவர்களும் மாளாத துயரத்தோடு அங்கு போனோம். திலீபனுக்கு அஞ்சலி செலுத்தினோம்.

செய்தியறிந்த மக்கள் கொதித்தெழுந்தார்கள். யாழ்ப்பாணத்தில் அரசு பஸ்கள் கொளுத்தப்பட்டன. இந்திய இராணுவத்தினர் வெளியில் நடமாட முடியாத நிலைமை ஆனால் பலாலிமுகாமிலிருந்து பிரபாகரன் அமைதிகாக்கும்படி மக்களை வேண்டிக்கொண்டார். பிரபாகரனின் இந்த வேண்டுகோளை ஒலிபெருக்கிகள்மூலம் மக்களுக்கு அறிவித்தபோது அமைதி ஏற்பட்டது. பிரபாகரனின் வேண்டுகோள் மந்திரசக்திபோல வேலைசெய்தது. கொதித்தெழுந்த மக்கள் தங்கள் கோபத்தை அடக்கிக்கொண்டனர். அவருடைய சொல்லுக்கு மக்கள் எப்படிக் கட்டுப்படுகிறார்கள் என்பதை அன்று நான் நேரில் பார்த்தேன். இந்தியராணுவ அதிகாரிகளும் அதைக் கண்டு அதிசயித்துப் போனார்கள். தீட்சித்துடன் பேசச்சென்ற தம்பியும் மற்றவர்களும் பேச்சுவார்த்தையை முடித்துக்கொண்டு திரும்பினார்கள். பிறகு திலீபனின் உடலுக்குத் தம்பி அஞ்சலி செலுத்தினார். திலீபனின் சாவு அவரை பெருமளவுக்குப் பாதித்தது என்பதை நான் நேரில்கண்டேன்". . .

குணபாலனுக்காகத் திலீபன் தன் தந்தையிடம் ஒரு டி.வி. வாங்கி வைக்குமாறு பலமுறை கெஞ்சிக் கேட்டார். இவரது தொல்லை தாங்கமுடியாமல் இராசையா ஆசிரியர் ஒரு நாள் டி.வி. யை வாங்கி வந்துவிட்டார். குணபாலனும் அன்றிலிருந்து எதுவித சிரமமுமின்றி டி.வி. பார்த்துவரத்தொடங்கினான். யார் மீதும் எளிதில் அன்பு வைப்பதிலும், இரக்கம் காட்டுவதிலும், திலீபனுக்கு நிகர் அவரேதான். அதற்கு இது ஒரு நல்ல உதாரணம் திலீபன் யாழ் இந்துவில் படிக்கும் போது அவரது நெருங்கிய நண்பனாக இருந்தவர்களில் கணேசன் என்பவரும் ஒருவர். இவர் இப்போது ஒரு டொக்ரராக இருக்கின்றார். ஒருநாள் திலீபன் கணேசன் மற்றும் சிலர் ஊரெழிவிலுள்ள திலீபனின் வீட்டுக்கு வந்தனர் அப்போது யாழ் இந்துவில் பொருட்காட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. திலீபனின் வீட்டிலே சில மாதங்களுக்குமுன் ஒரு நாய் செத்து விட்டதால், அதை ஒரு மரத்தின் கீழ் கிடங்கு வெட்டி தாட்டியிருந்தார்கள். திலீபனும் நண்பர்களும் அந்தக் கிடங்கைக் கிண்டி நாயின் எலும்புக் கூட்டை வெளியில் எடுத்துத் துப்புரவு செய்தார்கள். அப்போது ஏற்பட்ட துர்நாற்றம் காரணமாக வீட்டில் இருந்தவர்கள் வெளியே போனாலும், திலீபனும் நண்பர்களும் அதைப் பொருட்படுத்தாமல் தமது வேலையை முடித்துவிட்டு அந்த எழும்புக்கூட்டை அன்றே எடுத்துச் சென்று பொருட்காட்சியில் வைத்தனர். எதையும் ஆராய்ச்சி செய்துபார்ப்பதில் திலீபனுக்கு மிகுந்த ஆர்வம் உண்டு அதனால்தான் இந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் இறக்க நேரிட்டால் தனது உடலை யாழ் வைத்திய பீடத்துக்கு ஆராய்ச்சிப் படிப்புக்காக அனுப்பிவைக்கும்படி அவர் கூறினார் போலும்?



பார்ப்பது வழக்கம். குணபாலனுக்காகத் திலீபன் தன் தந்தையிடம் ஒரு டி.வி. வாங்கி வைக்குமாறு பலமுறை கெஞ்சிக் கேட்டார். இவரது தொல்லை தாங்கமுடியாமல் இராசையா ஆசிரியர் ஒரு நாள் டி.வி. யை வாங்கி வந்துவிட்டார். குணபாலனும் அன்றிலிருந்து எதுவித சிரமமுமின்றி டி.வி. பார்த்துவரத்தொடங்கினான். யார் மீதும் எளிதில் அன்பு வைப்பதிலும், இரக்கம் காட்டுவதிலும், திலீபனுக்கு நிகர் அவரேதான். அதற்கு இது ஒரு நல்ல உதாரணம் திலீபன் யாழ் இந்துவில் படிக்கும் போது அவரது நெருங்கிய நண்பனாக இருந்தவர்களில் கணேசன் என்பவரும் ஒருவர். இவர் இப்போது ஒரு டொக்ரராக் இருக்கின்றார். ஒருநாள் திலீபன் கணேசன் மற்றும் சிலர் ஊரெழிவிலுள்ள திலீபனின் வீட்டுக்கு வந்தனர் அப்போது யாழ் இந்துவில் பொருட்காட்சி நடைபெற்றுக்கொண்டிருந்தது. திலீபனின் வீட்டிலே சில மாதங்களுக்குமுன் ஒரு நாய் செத்து விட்டதால், அதை ஒரு மரத்தின் கீழ் கிடங்கு வெட்டி தாட்டியிருந்தார்கள். திலீபனும் நண்பர்களும் அந்தக் கிடங்கைக் கிண்டி நாயின் எலும்புக் கூட்டை வெளியில் எடுத்துத் துப்புரவு செய்தார்கள். அப்போது ஏற்பட்ட துர்நாற்றம் காரணமாக வீட்டில் இருந்தவர்கள் வெளியே போனாலும், திலீபனும் நண்பர்களும் அதைப் பொருட்படுத்தாமல் தமது வேலையை முடித்துவிட்டு அந்த எழும்புக்கூட்டை அன்றே எடுத்துச் சென்று பொருட்காட்சியில் வைத்தனர். எதையும் ஆராய்ச்சி செய்துபார்ப்பதில் திலீபனுக்கு மிகுந்த ஆர்வம் உண்டு அதனால்தான் இந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் இறக்க நேரிட்டால் தனது உடலை யாழ் வைத்திய பீடத்துக்கு ஆராய்ச்சிப் படிப்புக்காக அனுப்பிவைக்கும்படி அவர் கூறினார் போலும்?



*"இந்திய இராணுவம் எமது தாயக மண்ணில் காலடியெடுத்து வைத்த தினத்தையே எமது போராட்டத்தின் இருண்ட நாளாக நான் கருதுவேன். எமது போராட்டத்தில் இந்திய இராணுவம் தலையீடு செய்தது. ஒரு இருண்ட அத்தியாயம் என்றே சொல்ல வேண்டும்."*

